# பரிசுத்த அஹ்லுல் பைத்துக்களின் சிறப்பம்சங்கள்

## பரிசுத்த அஹ்லுல் பைத்துக்களின் சிறப்பம்சங்கள்

உருது மூலம்: ஹகீமுல் உம்மத், முப்தி, அல்லாமா, அஹ்மத் யார்கான் றஹ்மத்துள்ளாஹி அலைஹி

தமிழில்: மௌலவி பாஸில் ஏ.எல். பதுறுத்தீன் ஷர்க்கி பரேலவி ஸூபி காதிரி நக்ஷபந்தி.

www.busranarceyti.blogspot.com

Part ( 1 )

**சன்மார்க உலமாக்களே! பின்வரும் பிரச்சனைக்கான உங்கள் தீர்ப்பு என்ன?**

**இஸ்லாத்தில் அனைத்து குலம் கோத்திரங்களும் சமமானவர்கள், எவரும் எவரை விடவும் சிறப்பானவர்கள் அல்ல! ஆகவே, சையது, பட்டான், டெய்லி, நானே, டோபி உள்ளிட்ட அனைவரும் ஒரே தரத்தில் இருக்கின்றனர், சிறப்பு என்பது தக்வாவின் மூலம் தானே தவிர, பரம்பரையால் அல்ல! என்றும், பயபக்கதியுள்ள தந்தை , பாட்டனின் செயல் எவருக்கும் பயன் கொடுக்காது, அமல்கள் மட்டுமே பயன் கொடுக்கும் என்றும் ஸைத் என்பவர்கூறுகின்றார்.**

**இவர் தனது கூற்றுக்கு பின்வரும் திருவசனத்தை ஆதாரம் காட்டுகின்றார்**

**وجعلناكم شعوبا وقبائل لتعارفوا ان اكرمكم عند الله اتقاكم.**

**இன்னும், நீங்கள் பரஸ்பரம் அறிந்து கொள்வதற்காக உங்களை குலங்களாகவும், கோத்திரங்களாகவும் ஆக்கினோம், நிச்சயமாக உங்களில் சிறந்தவர் உங்களில் அதிக தக்வா உடையவராகும் . 49 : 13**

**மேலும் கூறுகின்றார்.**

பாத்திமாவே! அல்லாஹ்வின் தண்டனையிலிருந் உம்மை என்னால் தடுக்க முடியாது, என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள்.

உமர் கூறுகிறார், ஸைத் கூறுவது போன்றல்ல! ஸெய்யித் என்பவர், அனைத்து குடும்பங்களையும் விடவும் சிறப்பானவர், பயபக்தி உள்ள பெரியோர்களின் பிள்ளைகளுக்கு அவர்களின் பெற்றோர், பாட்டன்களின் நன்மைகள் கண்டிப்பாக பலன் கொடுக்கும்.

இருவரில் எவர் கூற்று சரியானது? என்பதை தயவு செய்து கூறுங்கள்! தெளிவுபடுத்துங்கள்! அல்லாஹ் உங்களுக்கு நற்கூலி அருளுவான். ஆமீன்.

பதில்: இவ்விருவரின் பிரச்சனையில் உமறின் கூற்றே சரியானது, ஸைதின் கூற்று பிழையானது, அபத்தமானது, சங்கையான ஸாதாத்துமார்களின் குலம் அடுத்தவர்களின் குலங்களை விட மேலானது, சிறப்பானது இன்னும், முஃமின்களிலுள்ள ஸாலிஹானவர்களின் நல்லமல்கள் இன்ஷாஅல்லாஹுத் ஆலா பிள்ளைகளுக்கு நிச்சயம் பலன் கொடுக்கும்.

இவ்விரு பிரச்சினைகளும் திருக்குர்ஆனின் திருவசனங்கள், ஸஹீஹான ஹதீதுகள், மற்றும் பகுத்தறிவு சான்றுகள் உள்ளிட்டவை மூலம் நிரூபணமாகியுள்ளன,

**ஆதாரங்களைக் கவனியுங்கள்!**

**திருவசனம் : 1**

1- والذين امنوا واتبعنهم ذريتهم بايمان الحقنا بهم ذريتهم بايمان وما التناهم من عملهم من شيء..

இன்னும், எவர் ஈமான் கொண்டு அவர்களின் பிள்ளைகளும் ஈமானோடு அவர்களைப் பின்பற்றினால், அவர்களோடு அவர்களின் பிள்ளைகளையும் சேர்த்து வைப்போம், இன்னும், அவர்களின் கிரிகைகளில் அவர்களுக்கு எந்த குறையும் இருக்க மாட்டாது. 52 : 21

ஆகவே, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முஃமினான பிள்ளைகள் இன்ஷா அல்லாஹ் கியாமத்தில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களோடு இருப்பார்கள், இதில் சங்கையான சாதாத்துமார்களின் குடும்பத்திற்கு மகத்துவமும் இருக்கிறது, இன்னும், நல்லடியார்களின் அமல்கள் பயன் கொடுக்கும் என்பதும் தெரிய வருகிறது.

**திருவசனம் : 2**

2- قل لا اسالكم عليه اجرا الا المودة في القربى

நேசரே கூறுங்கள்! மார்க்கத்தை எத்திவைத்ததற்காக என்குடும்பத்தை நேசிக்க வேண்டும் என்பதையேயல்லாது வேறு எதையும் கூலியாக உங்களிடத்தில் நான்கேட்கவில்லை . 42: 23

இத்திரு வசனத்துக்கான தப்ஸீர்களில் இதுவும் ஒன்று! அதாவது, எனது ஹக்கின் காரணமாக கண்ணியத்துக்குரிய எனது குடும்பத்தை மஹப்பத் வைத்துக் கொள்ளுங்கள். சங்கையான சாதாத்துகள் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பமும், பிள்ளைகளுமாகும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்காக அவர்களை நேசிப்பது கடமை! ஏனைய குடும்பங்களுக்கு இந்த நிலை கிடையாது.

## திருவசனம் - 3

3- واعلموا انما غنمتم من شيء فان لله خمسه وللرسول ولذي القربى وليتمي والمساكين .

அறிந்து கொள்ளுங்கள்! நீங்கள் பெற்றுக்கொண்ட ஙனீமத் - கொள்ளைப்பொருட்களில் ஐந்தில் ஒரு பங்கு அல்லாஹ்வுக்கும், இன்னும், றஸூலுக்கும், இன்னும் றஸூலின் குடும்பத்திற்கும், இன்னும், அநாதைகளுக்கும், இன்னும் மிஸ்கீன்களுக்குமாகும் . 8: 41 .

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்தில் ஙனீமத் பொருட்களில் ஐந்தில் ஒன்று நபியவர்களின் குடும்பத்திற்கு வேறாக இன்னும் , தனித்துவமாகக் கொடுக்கப்பட்டது, இமாம் ஷாபிஈ ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களிடத்தில் இப்பொழுதும் செய்யிதுகளுக்கு இந்த ஐந்தில் ஒரு பங்கு கிடைக்கும், ஏனைய குலத்தார்களுக்கு இந்த கண்ணியம் கிடையாது.

## திருவசனம் 4-

4- وكان ابوهما صالحا واراد ربك ان يبلغا اشدهما يستخرجها كنزهما .

(ஹழறத் ஹிழ்று அலைஹிஸ்ஸலாம் ஹளறத் மூஸா அலைஹிஸ் ஸலாமவர்களிடத்தில் கூறினார்கள்), அந்த சுவர் நகரத்திலிருக்கும் இரு அனாதைச் சிறுவர்களுக்குரியதாகும், அதற்கடியில் அவ்விருவருக்குமுரிய புதையல் உள்ளது, அவர்களின் தந்தை நல்ல மனிதர், அவ்விருவரும் வாலிபத்தை அடை வதையும், இன்னும், தங்களுடைய புதையலை வெளிப்படுத்துவதையும் தங்களின் ரப்பின் ரஹ்மத்திலிருந்து உங்கள் ரப்பு நாடினான். 17-82

அவ்விரு எத்தீம்களின் தந்தை முத்தகியான மனிதராக இருந்த காரணத்தினால்தான் ரப்பு அவ்விருவரிலும் இரக்கம் காட்டினான் என்பதை இத் திருவசனத்திலிருந்து புரிந்து கொள்கின்றோம், எனவே, நல்லோர்களின்

நன்மைகள் பிள்ளைகளுக்கு பயன் கொடுக்கும் என்பது தெரிகிறது, ஆகவே, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நன்மைகள் சங்கையான சாதாத்துமார்களுக்கு நிச்சயமாக பலன் கொடுக்கும்.

திருவசனம் 5

5- وجعلنا في ذريته النبوة والكتب

இன்னும் , நாம் இப்றாஹீமின் பிள்ளைகளில் நுபுவ்வத்தையும், வேதத்தையும் வைத்தோம். 29: 27

அதாவது, இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாம் அவர்களுக்குப் பின் அனைத்து நபிமார்களும் அன்னாரின் பிள்ளைகளாகவே இருந்தனர், இன்னும், அனைத்து வேதங்களும் ,ஆகமங்களும் அன்னாரின் பிள்ளைகள் மீதே வந்தன, அவர்களின் பிள்ளைகளுக்கு இத்துணை மகத்துவமும், கண்ணியமும் இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாமவர்கள் மூலமாகவே கிடைத்தன, ஆகவே, அன்னாரின் பரம்பரை கண்ணியமானதாகும்.

திருவசனம் :6

6- يا بني اسرائيل اذكروا نعمتي التي انعمت عليكم واني فضلتكم على العلمين.

யஃகூபின் மக்களே! உங்கள் மீது நாம் புரிந்த எனது அருட்கொடையையும், இன்னும், உங்களை அந்தக்காலத்தில் உலகிலுள்ளவர்களை விட மேம்படுத்தி வைத்ததையும் நினைத்துப் பாருங்கள். 2: 47

ஹளறத் யஃகூப் அலைஹிஸ்ஸலாமவர்களின் பிள்ளைகளை அக்காலத்தில் உலகிலுள்ள அனைவரையும் உயர்வாக்கி வைத்ததன் மூலம் அன்னாரின் குடும்பம் உயர்வாகிவிட்டது என்பதை தெரிந்து கொள்கின்றோம், ஆகவே , திட்டவட்டமாக றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்பமாகிய ஸாதாத்மார்கள் இப்போது உலகிலுள்ள அனைவரையும் விட உயர்ந்த குடும்பத்தினர்களாவார்கள்.

திருவசனம் 7

7: واذكروا الاء اللّٰه عليكم اذ جعل فيكم انبياء
وجعلكم ملوكا.

யஃகூபின் மக்களே! உங்கள் மீதுள்ள எனது நிஃமத்தை நினைவுகூறுங்கள், ஏனெனில் , உங்களிலே நபிமார்களை ஏற்படுத்தினோம், இன்னும் ,உங்களுக்கு அரசர்களையும்உண்டாக்கினோம். 5: 20

ஏனைய சமுகளுக்குக் கிடைக்காமல் ஏதாவது ஒரு சமுகத்தில் நபிவருவது

அல்லாஹ்வின் விஷேஷமான நிஃமத் என்று புரியமுடிகின்றது, ஆகவே, சங்கையான ஸாதாத்மார்களில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வருகை தந்தது அல்லாஹுத்த ஆலாவின் தனித்துவமான அருட்கொடையாகும், இந்த நிஃமத் அடுத்தவர்களுக்குக் கிடையாது.

திருவசனம்: 8

8- يا نساء النبي لستن كاحد من النساء ان التقيتن

நபியின் மனைவிமார்களே! நீங்கள் பயபக்தியை தேர்ந்தெடுத்துக்கொண்டால், நீங்கள் ஏனைய பெண்களைப்போன்றவர்களல்ல. 33: 32

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பயபக்தியுள்ள மனைவிமார்கள் உலகம் முழுவதிலுமுள்ள பயபக்தியான பெண்களை விட மேலானவர்கள், ஏனெனில், அவர்கள் நபியவர்களின் மனைவிகள், ஆகவே, பயபக்தியுள்ள சங்கையான ஸாதாத்மார்கள் ஏனைய பயபக்தியுள்ள ஸாதாத்மார்களை விட உயர்வானவர்களாகும், ஏனெனில், அவர்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்பமாகும்.

திருவசனம் 9

9- انما يريد الله ليذهب عنكم الرجس اهل البيت و يطهركم تطهيرا

நபியின் குடும்பத்தார்களே! உங்களிலிருந்து அசிங்கத்தைத் தூரமாக்கவும், இன்னும், உங்களை நன்கு பரிசுத்தப் படுத்தவுமே அல்லாஹ் நாடுகின்றான். 33: 33

அஹ்லுல் பைத்துக்கள் நபியவர்களின் பரிசுத்தமான மனைமார்களாயினும் சரி, அல்லது , பரிசுத்தமான பிள்ளைகளாயினும் சரி அனைவரையும் றப்புத்த ஆலா பரிசுத்தப்படுத்தியுள்ளான், ஏன்? அவர்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்பத்தினர்கள், இந்த தனித்துவமான பரிசுத்தம் ஏனைய குடும்பத்தினர்களுக்கு இலகுவானதாகாது. பின்னர், ஸாதாதுக்களின் தனித்துவம் எப்படி இருக்கும் என்பதை எண்ணிப்பாருங்கள்?

திருவசனம் : 10

10: ومن ذريتنا امة مسلمة لك

ஹளறத் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் தங்களுடைய பிள்ளைகளுக்காக துஆக்கேட்டார்கள்,

யாஅல்லாஹ் ! எமது பிள்ளைகளில் தனக்கு வழிப்பட்டு சொல்கேட்டு நடக்கும்

ஒரு கூட்டத்தை ஆக்கி வைப்பாயாக! 2: 128

அனைத்து செய்யிதுகளும் ஒருபோதும் வழிகெடமாட்டார்கள், ஏனைய இஸ்லாமிய கூட்டத்தில் உள்ள அனைவரும் வழிகெட வாய்ப்புள்ளது என்பதை இந்த துஆவிலிருந்து புரிய முடிகின்றது, ஹளறத் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாமவர்களின் பரம்பரையும், குடும்பமும் உயர்ந்தவர்கள், சிறந்தவர்கள், அவர்கள் ஹளறத் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாமவர்களின் இந்த துஆவினால் இதை அடைந்து கொண்டார்கள் என்பது தெரிந்து விட்டது.

திருவசனம் : 11-

لا اقسم بهذا البلد وانت حل بهذا البلد ووالد وما ولد

நேசரே! நீங்கள் இந்த நகரத்தில் இருப்பதால், இந்த நகரத்தின் மீது எனது சத்தியம்! இன்னும், உமது தந்தையின் மீது சத்தியம்! இன்னும், அவரின் பிள்ளைகளின் மீது சத்தியம். 90: 1-3

இந்த திருவசனத்தின் தப்ஸீர்களில் தந்தை என்பது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களையும், பிள்ளைகள் என்பது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிள்ளைகள் என்றும் ஒரு விளக்கம் -தப்ஸீர் -உண்டு, எனவே, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நகரம் (மக்கா முகர்ரமா) ஏனைய அனைத்து நகரங்களை விடவும் மேலானது, இன்னும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பரிசுத்தமான பிள்ளைகள் ஏனைய அனைத்து குடும்பங்களை விடவும் உயர்ந்தவர்கள். இவர்களில் அல்லாஹுத்த ஆலா சத்தியம் செய்திருக்கின்றான்.

மேலும், பெற்றார் என்பது ஹளறத் அப்துல்லாஹ் இன்னும் காத்தூன் ஆமினா றழியல்லாஹு அன்ஹுமா அவர்களையும், பிள்ளை என்பது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களையும் குறிக்கவும் முடியும்.

Part - 2

# ஹதீதுகள்

இது தொடர்பில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஹதீதுகள் ஏராளமாக உள்ளன, சில இடங்களில் ஹளறத் ஹஸன், ஹுஸைன் சொர்க்கத்து இளவல்களின் தலைவர்கள் என்று கூறியுள்ளார்கள், ஃபாத்திமா சொர்க்கத்துப் பெண்களின் தலைவி என்றும் கூறியுள்ளார்கள், இவ்வாறு நிறையவே கூறியிருக்கின்றார்கள், பறக்கத்தை நாடி சில ஹதீதுகளை இங்கே முன்வைக்கின்றேன்.

ஹதீது. : 1

ان الله اصطفى كنانة من ولد اسماعيل واصطفى قريشا من كنانة واصطفى من قريش بني هاشم واصتفاني من بني هاشم.

அல்லாஹுத்தஆலா இஸ்மாயில் அலைஹிஸ்ஸலாத்து வஸ்ஸலாம் அவர்களின் பிள்ளைகளிலிருந்து கினானாவைத் தெரிவு செய்தான், பனூ கினானாவிலிருந்து குறைஷிகளையும், குறைஷிகளிலிருந்து பனூஹாஷிம்களையும் தேர்வு செய்தான், இன்னும், பனூ ஹாஷிம்களிலிருந்து என்னைத் தேர்வு செய்தான்.

முஸ்லிம், திர்மிதி , மிஷ்க்காத் பாடம் ஃபழாயில் ஸெய்யிதுல் முர்ஸலீன்.

மேற்கூறப்பட்ட கோத்திரங்கள் அனைத்தும் ஏனைய கோத்திரங்களை விட பரிசுத்தமானவைகளும் மேலானவைகளுமாகும் என்பது இதன் மூலம் தெரிகிறது.

ஹதீது : 2

انا تارك فيكم الثقلين اولهما كتاب الله فيه الهدى والنور فخذوا بكتب الله واستمسكوا به وحث على كتب الله ورغب فيه واهل بيتي اذكركم الله في اهل بيتي اذكركم الله في اهل بيتي

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

நான் உங்கள் மத்தியில் இரண்டு உயர்ந்த மதிப்புமிக்க பொருட்களை விட்டுச் செல்கிறேன், ஒன்று அல்லாஹ்வின்திரு வேதம்! அதில் ஹிதாயத்தும், நூறும் இருக்கிறன, ஆகவே, அல்லாஹ்வின் வேதத்தை எடுத்துக் கொள்ளுங்கள், அதை பலமாகப் பிடித்துக் கொள்ளுங்கள், அல்லாஹ்வின் வேதத்தின் மீது மக்களுக்கு ஆசை யூட்டினார்கள், இரண்டாவது, எனது குடும்பம்! எனது குடும்பத்தின் விடயத்தில் உங்களுக்கு அல்லாஹ்வை எச்சரிக்கிறேன்.

ஸஹி முஸ்லிம்

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பமாகிய பரிசுத்த அஹ்லுல் பைத்துக்கள் திருக்குர்ஆனைப் போன்று மகத்துவமிக்கவர்களாகும், எவ்வாறு ஈமானுக்காக குர்ஆனை ஏற்பது கடமையோ, அவ்வாறே ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்பத்தை ஏற்பதும் கடமையாகும்,

இவர்களல்லாத கோத்திரங்களுக்கு இந்த சிறப்பு எங்கே இருக்கிறது?

ஹதீது :3

احبوني لحب الله واحبوا اهل بيتي لحبي.

அல்லாஹ்வுக்காக என்னை நேசியுங்கள், இன்னும், எனக்காக எனது குடும்பத்தை நேசியுங்கள்.

திர்மிதி ,
அறிவிப்பவர் ஹளறத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா

ஹதீது :4

الا ان اهل بيتي فيكم مثل سفينة نوح من ركبها نجا ومن تخلف منها هلك

உங்கள் மத்தியில் எனது அஹ்லு பைத்துக்கு உதாரணம் நூஹின் கப்பலை போன்றாகும், அதில் ஏறியவர் வெற்றி பெற்றார், அதிலிருந்து பின்வாங்கியவர் நாசமானார்

அஹ்மத், அறிவிப்பவர், அபூதர் ஙிபாரி றழியல்லாஹு அன்ஹு

ஹதீது :5

اني تارك فيكم ما ان تمسكتم به لن تضلوا بعدي احدهما اعظم من الاخر كتب الله حبل ممدود من السماء والارض وعترتي اهل بيتي ولم يتفرقا حتى ترد علي الحوض فانظروا كيف تخلفوني فيهما.

நான் உங்கள் மத்தியில் விட்டுச் செல்லும் அந்தப் பொருளை பிடித்துக் கொள்ளும் வரை எனக்குப் பின்னால் ஒரு போதும் நீங்கள் வழிகெட்டுச் செல்ல மாட்டீர்கள், அவற்றில் ஒன்று மற்றதை விட பலமானதாகும், அல்லாஹ்வின் திரு வேதம் அது அல்லாஹ்வின் நீளமான கயிறாகும், அது வானத்திலிருந்து பூமி வரையும் நீண்டிருக்கிறது இரண்டாவது எனது குடும்பம், என்னை ஹவுலுல் கௌதர் தடாகத்தில் சந்திக்கிற வரையில் இந்த இரண்டில் ஒன்றை விட்டும் பிரியக் கூடாது, ஆகவே, நீங்கள் இந்த இரண்டில் என்னை எவ்வாறு பிரதிநிதித்துவப்படுத்துகிறீர்கள் என்பதை கவனித்துக் கொள்ளுங்கள்.

திர்மிதி, அறிவிப்பவர் , ஸைத் இப்னு அர்கம் றழியல்லாஹு அன்ஹு

ஹதீது: 6

ان هذه صدقاتي انما هي اوساخ الناس انما لا تحل لمحمد وعلى لال محمد

இந்த சதக்கா மக்களின் அசுத்தமாகும் இந்த சதக்கா முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு ஹலாலில்லை ,நபியவர்களின் பிள்ளைகளுக்கும் ஹலால் இல்லை.

ஸஹி முஸ்லிம்,

அறிவிப்பவர் , அப்துல் முத்தலிப் இப்னு ரபியா றழியல்லாஹு அன்ஹு

இத்தனை பரக்கத்துக்களும் செய்யிதுகளுக்கு அவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பரம்பரையில் இருக்கிறார்கள் என்பதனால் தான் கிடைக்கிறன, சைய்யிது அல்லாதவர் எவ்வளவு பயபக்தியானவர்களாக இருந்தாலும் கூட ,இந்த சிறப்புகளைப் பெற்றுக் கொள்ள முடியாது, ஆகவே, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்பம் ஏனையவர்களை விட சிறப்புப் பெற்றவர்கள் என்பதனை இதன் மூலம் தெரிந்து கொள்கிறோம்.

ஹதீது : 7

كل نسب وسبب منقطع يوم القيامة الا نسبي وسببي.

கியாமத் நாளில் எனது குடும்பம், எனது. உறவுமுறையைத்தவிர ஏனைய அனைத்து குடும்பமும் உறவு முறையும் பலன்கொடுக்காது

றத்துல் முக்தார், பாகம்-1 பாடம் , மையித்தைக் குளிப்பாட்டல்.

ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு ஃபாத்திமத்துஸ்ஸஹறா றழியல்லாஹு அன்ஹா அவர்களின் திருமகள் ஸெய்யிதா உம்மு குல்தூம் றழியல்லாஹு அன்ஹாவைத் திருமணமுடித்ததன் நோக்கம் அல்லாஹ்வின் சிங்கமாகிய ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு மூலமான உறவை ஏற்படுத்திக் கொள்வதற்காகும். என்ற தகவலை மேற்படி நூலில் கூறிய பின் ,

ولا انساب بينهم يؤمن ولا يتساءلون

கியாமத்தில் குடும்பம் பலன்கொடுக்காது என்ற இத்திருவசனத்தின் சட்டத்திலிருந்து றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்பம் விலக்களிக்கப்படுகிறது. அக்குடும்பம் நிச்சயம் பலன் கொடுக்கும்,

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மறுமை நாளில் உம்மத்தில் எல்லோரையும் கரை சேர்க்கும்போது தனது பிள்ளைகளை எவ்வாறு கரை சேர்க்க மாட்டார்கள், கன்னியமான சாதத்துமார்களின் பரம்பரை பரிசுத்தமாவதற்கும், இச்சிறப்பு அவர்களுக்கு கிடைப்பதற்கும் அவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்பமாயிருப்பது தான் காரணமாகும்.

ஹதீது: 8

الناس تبع للقريش مسلمهم تبع لمسلمهم وكافرهم تبع للكفرهم.

அனைத்து மக்களும் குறைஷிகளைப் பின்தொடர்கின்றவர்களாகும். அவர்களுள் முஸ்லிம்கள் அவர்களின் முஸ்லிம்களையும், அவர்களிலுள் ள காபிர் கள் அவர்களிலுள்ள காபிர் களையும் பின் தொடர்கின்றனர்.

முஸ்லிம், புகாரி, மிஷ்க்காத் பாடம் மனாகிப் குறைஷ்

ஹதீது :9

لا يزال هذا الامر في قريشن ما بقي منهم واثناني

இந்த கிலாபத் குறைஷிகளில் இருவர் கூட இருக்கும் வரை குறைஷிகளிலிருக்கும்,

புகாரி, முஸ்லிம்.

மேற்கண்ட ஹதீதுகளிலிருந்து அனைத்து முஸ்லிம்களும் குறைஷிகளைத் தொடர்பவர்களாகும், இன்னும் இஸ்லாமிய கிலாபத் குறைஷிகளுக்குத்தான் சொந்தமாகும்.

தொடரும்....

## பகுத்தறிவு ஆதாரங்கள்

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பரிசுத்த குடும்பம் ஏனைய அனைத்து குடும்பங்களை விடவும் உயர்ந்தது, சிறந்தது என்பதை பல காரணங்களினால் பகுத்தறிவும் ஏற்கிறது,

ஆதாரம்: 1

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களோடு தொடர்பு கொண்டதனால் பொடிக் கற்கள், பாறைகள், விலங்குகள் கண்ணியத்தைப் பெற்றுக்கொள்கின்றன, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சிறப்பான ஒட்டகம் ஏனைய அனைத்து ஒட்டகங்களையும் விட மேலானது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நகரத்திலுள்ள கற்கள் அரசர்களின் கிரீடங்களைவிட சிறந்தது, றப்புத்த ஆலா திருமறையில் " இந்த நகரத்தின் மீது சத்தியமாக " என்று கூறி சத்தியம் செய்துள்ளான், ஆகவே, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஈரல் கொழுந்து , விழியொளி ஏனைய கோத்திரங்களை விட, கண்டிப்பாக மேலானவர்

கள்தான்.

ஆதாரம் : 2

அனைத்து மக்களும் ஸக்காத் , ஸதகாக்களை உண்ண முடியும், ஆனால் சங்கையான ஸாதாத்மார்கள் சக்காத் எடுக்கமுடியாது, வாஜிபான ஸதக்காவையும் உண்ண முடியாது, ஏனெனில், இவை பொருட்களின் அழுக்குகளாகும், ஸாதாத்மார்களும் ஏனைய குடும்பத்தையொத்தவர்களாயின், அவர்களுக்கும் ஸக்காத்தை உண்ணுவது ஆகுமாக இருந்திருக்கும், எனவே, இப்பரிசுத்த குடும்பம் அதியுச்ச தூய்மையானவர்கள், தவிர, ஏனைய கோத்திரங்களை விட உயர்ந்தவர்கள் என்பது தெளிவு.

ஆதாரம் : 3

தொழுகையில் இப்றாஹீமியா ஸலவாத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருப்பெயரோடு அவர்களையும் கூடவே சேர்த்து ஓதப்படும் பாக்கியம் இவர்களுக்குண்டு, ஏனைய கோத்திரங்கள் ஸலவாத்திற்குள் நுழையவே முடியாது, ஆகவே, சிறப்பான இந்த குடும்பத்தினர் தொழுகைக்குள்ளும் நுழையும் பாக்கியம் பெற்றவர்கள் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள், எனவே , இவர்கள் ஏனையவர்களை விட மேலானவர்கள்தான்.

ஆதாரம் :4

ஹளறத் தல்ஹா றழியல்லாஹு அன்ஹு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடமிருந்து இரத்தம் குத்தியெடுத்த குருதியை வெளியில் கொட்டுவதை மரியாதையீனமாகக் கருதி குடித்தார்கள், அதுவேளை "உமது வயிற்றில் வலிவராது" என்றும், நரக நெருப்பு உம்மைத்தீண்டாது என்றும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குருதி வயிற்றில் புகுந்ததால் இந்தளவு தாக்கம் செய்யுமாயின், அன்னாரின் குருதியில் சமைந்த ஈரல் கொழுந்தின் மகத்துவத்தைச் சொல்லவும் முடியுமா?

ஆதாரம் : 5

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அனைத்து நபிமார்களுக்கும் தலைவராகும், அவ்வாறே நபியவர்களின் ஒவ்வொரு பொருளும் ஏனைய அனைத்து நபிமார்களின் பொருட்களை விட மேலாகும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் உம்மத் ஏனைய உம்மத்துக்களை விட மேல் என்று திருக்குர்ஆன் கூறுவதைக் கவனியுங்கள்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மனைவிமார்கள் உலகத்திலுள்ள அனைத்து மனைவிமார்களைவிடவும்

மேலானவர்கள், நபியவர்களின் நகரம் ஏனைய நகரங்களைவிட மேல், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஸஹாபாக்கள் ஏனைய நபிமார்களின் தோழர்களை விட மேலானவர்கள், இந்த விதிப்படி, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிள்ளைகள் ஏனைய நபிமார்களின் பிள்ளைகளைவிட மேலானவர்களும், உயர்ந்தவர்களும் ஆவார்கள் என்பதை ஏற்றுத்தான் ஆக வேண்டும், இல்லையென்றால், நபியவர்களோடு தொடர்பான ஒவ்வொரு பொருளும் மகத்துவம் பெறும் பொழுது அன்னாரின் பிள்ளைகளுக்கு மட்டும் மகத்துவம் பிறக்காமலிருப்பதற்கு என்ன காரணம்?

தொடரும்...

# குற்றச்சாட்டுக்களும், பதில்களும்

இதுவரை கேள்வி கேட்டவருக்கான பதில்கள் வழங்கப்பட்டன, அடுத்து ஸைதின் குற்றச்சாட்டுக்களுக்கான பதில்களை செவிமடுங்கள்.

குற்றச்சாட்டு. : 1

وجعلناكم شعوبا وقبائل لتعارفوا ان اكرمكم عند الله اتقاكم

இன்னும், நீங்கள் பரஸ்பரம் அறிந்து கொள்வதற்காக உங்களை குலங்களாகவும், கோத்திரங்களாகவும் ஆக்கினோம், நிச்சயமாக உங்களில் சிறந்தவர் உங்களில் அதிக தக்வா உடையவராகும் . 49 : 13

ஸைத் என்பவர் முன்வைத்த மேற்படி திரு வசனத்தின் பொருள், இஸ்லாத்தில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்பம் ஏனைய குடும்பங்களை விட, எந்த வகையிலும் சிறப்புப் பெற்றவையல்ல என்று ஸைத் புரிந்து கொண்ட மாதிரி அல்ல! இத்திரு வசனத்தின் நோக்கம் இதுவாகத்தானிருந்தால், நாம் முன்வைத்த திருவசனங்களுக்கு அது முரணாகவும், எதிராகவும் அமையும்.

இத்திரு வசனத்தின் நோக்கம் முஸ்லிம்கள் அனைவரும் கண்ணியத்திற்குரியவர்கள், அவர் எந்த கோத்திரத்தோடு தொடர்பு வைத்திருந்தாலும் சரி! எந்த ஒரு இஸ்லாமிய சமுதாயமும் இழிவானவர்கள ல்ல, அரபு மக்களிடத்தில் சில கோத்திரங்களை இழிவானவர்களாகவும், கடையர்களாகவும் கருதி இருந்தனர், ஆனால், முஸ்லிம்களுக்கு மத்தியில் எந்த ஒரு சமுதாயமும் இழிவானவர்கள் அல்ல ,,ஆனால், சிலர் சிலரை விட சிறப்பானவர்கள்என்பது உண்மைதான்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

العزة لله ولرسوله وللمؤمنين.

கண்ணியம் அல்லாஹ்வுக்கும், இன்னும் ரசூலுக்கும், இன்னும் முஃமின்களுக்குமாகும். 63 8

மேற்படி திரு வசனத்தில் அனைத்தும் முஸ்லிம்களும் உள்ளடங்குவார்கள், இதை ஒப்புமை இல்லாமல் இவ்வாறு புரிந்து கொள்ளுங்கள், அனைத்து நபிமார்களும் கண்ணியத்திற்குரியவர்கள், அல்லாஹ்வின் நேசர்களைமற்றும், ஏதாவது ஒரு நபியை தரக்குறைவாக நினைப்பது ஒழுங்கீனமும், குப்ருமாகும், ஆனாலும், சில நபிமார்கள் சிலரை விட மேலானவர்கள்என்பது உண்மையே!

அல்லது இத்திருவசனத்தின் பொருள், எந்த ஒரு கோத்திரமும் சிறப்பை பெறவேண்டுமாயின், தக்குவாவையும் பேணுதலையும் கைவிடக்கூடாது என்பதனை கவனத்தில் கொள்ள வேண்டும், அல்லாஹ்விடத்தில் எந்தளவு தக்வா அதிகமுள்ளதோ, அந்தளவு படித்தரமும் உயர்ந்து காணப்படும், உயர்ந்த சமுகத்திலுள்ளவர்கள் உயர்ந்த தக்வா உள்ளவர்களாக இருக்க வேண்டும்.

அல்லது, இத்திரு வசனத்தின் பொருள், முஸ்லிம்கள் எந்த ஒரு முஸ்லிம் சமுகத்தையும் குறை காணக் கூடாது, இன்னும், எந்த ஒரு முஸ்லிமையும் தாழ்ந்தவர்களாக நினைக்கக் கூடாது, எந்த ஒரு முஸ்லிம் சமுகத்தையும் நையாண்டி பண்ணக்கூடாது, ஒவ்வொரு முஸ்லிமுக்குமான கண்ணியம், மரியாதை வாஜிபாகும்.

பின்வரும் திருவசனம் இத்திரு வசனத்திற்கான தப்ஸீராக அமைந்துள்ளது,

يا ايها الذين امنوا لا يسخر قوم من قوم عسى ان يكونوا خيرا منهم

ஈமான் கொண்டவர்களே! ஒரு மனிதன் மற்ற மனிதனை பரிகாசம் செய்ய வேண்டாம், அவர் பரிகாசம் செய்வோரை விட, மேலாய் இருப்பது வியப்பானதல்ல. 49 : 11

ஒரு குடும்பம் சிறப்பானவர்களாகுவதனால் அடுத்தவர்கள் இழிவானவர்கள் என்பது அவசியப்படாது, ஆகவே, சங்கையான சாதாத்துமார்களுக்கு அடுத்த முஸ்லிம்களை இழிவாகவும் தரக்குறைவாகவும் கருதுவதற்கு உரிமை இல்லை, ஒவ்வொரு முஸ்லிமுக்கும் அவர்களுக்குரிய மரியாதையும், கௌரவமும் அவசியமானது ,ஏனைய முஸ்லிம்கள் சங்கையான சாதாத்மாரை கண்ணியப் படுத்துவதற்கான காரணம், அவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடைய குடும்பம், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தான் நமக்கு கலிமா சொல்லித் தந்தார்கள், குர்ஆனைத் தந்தார்கள், ஈமானைத் தந்தார்கள், ஆகவே ,அவர்களின் பிள்ளைகளைக் கண்ணியப்படுத்த வேண்டியது ஒவ்வொரு முஸ்லிமின் கடமையாகும்.

குற்றச்சாட்டு: 2

**சில மனிதர்கள் பின்வரும் திருவசனத்தினால் ஏமாந்து போய்விடுகின்றனர்.**

**لن تنفعكم ارحامكم ولا اولادكم يوم القيمة**

**கியாமத்து நாளில் உங்களின் உறவினர்களும், இன்னும், உங்களுடைய பிள்ளைகளும் கண்டிப்பாக உங்களுக்குப் பிரயோசனப் பட மாட்டார்கள்.**
**60 : 3..**

கியாமத்து நாளில் எந்த ஒரு குடும்பமும், பிள்ளைகளும் தொப்புள் கொடி உறவுகள் என்பதில், அனைத்து உறவுகளும் ,அனைத்து பிள்ளைகளும் உள்ளடங்குவார்கள், நபிமார்களுடைய பிள்ளைகள், வலிமார்களின் பிள்ளைகள் உள்ளிட்ட அனைவரும் இதில் அடங்குவர்.

**பதில்:** இத்திரு வசனத்தில் உள்ள பிள்ளைகள், உறவினர்கள் என்பது, முஸ்லிம்களின் காபிரான பிள்ளைகள்,உறவுகளைப் பற்றியே கூறப்பட்டுள்ளது, முஸ்லிம்களின் உறவால் காபிர்களுக்கு எந்த விதமான பாதுகாப்பும் கிடையாது.

இத்திரு வசனத்திற்கும், நபிமார்கள், மற்றும் சாலிஹான பிள்ளைகளுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது, **ஏனெனில், இத்திருவசனத்தின் ஆரம்பத்தை பின்வரும் திருவசனத்திலிருந்து அல்லாஹுத்த ஆலா ஆரம்பம் செய்கின்றான்.**

**يا ايها الذين امنوا لا تتخذوا عدوي وعدوكم اولياء.**

**ஈமான் கொண்டவர்களே! என்னுடையதும், மற்றும் உங்களுடையதுமான விரோதிகளை நண்பர்களாக ஆக்கிக் கொள்ள வேண்டாம். 60 :1**

இத்திருவசனத்தின் பகுதி ஹளறத் ஹாதிப் இப்னு அபீ பல்தஆ றழியல்லாஹு அன்ஹு அவர்கள் விடயத்தில் இறங்கியது, இவர் மக்காவிலுள்ள தனது பிள்ளை குட்டிகளைப் பாதுகாப்பதற்காக மக்கத்துக் காபிர்களுக்காக உளவு பார்த்து முஸ்லிம்களின் இரகசியங்களை எழுதி அனுப்பினார்கள், இவர்களின் பிள்ளைகள் மக்காவில் காபிர்களின் பிடியிலிருந்தார்கள்,

குற்றச்சாட்டிலுள்ள திருவசனத்தின் இறுதியில் يفصل بينكم الله என்றுள்ளது, அதாவது, கியாமத்தில் உங்களுக்கும், உங்கள் குடும்பத்தாருக்குமிடையில் இடைவெளியை அல்லாஹ் ஏற்படுத்துவான், உங்களை சொர்க்கத்திலும், அவர்களை நரகத்திலும் நுழைவிப்பான்,.

இத்திரு வசனத்தை அடுத்து அவசரமாக ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாத்து வஸ்ஸலாமவர்களின் நிகழ்வை அல்லாஹுத்த ஆலா முஸ்லிம்களுக்குத் தெரிவிக்கின்றான், அவர்கள் இஸ்லாத்திற்கு எதிரான தனது

காபிரான சமுகத்திலிருந்து முழுமையாக விலகியிருந்தார்கள்,

இவ்வனைத்து முகாந்திங்களிலிருந்தும் இத்திருவசனத்தில் குறிப்பிடப்படும் உறவு காபிரான உறவு என்பது தெளிவாகிறது,

இத்திரு வசனத்திற்கு விளக்கம் பின்வரும் திருவசனமும் தப்ஸீராக உள்ளது.

لا تجد قوما يؤمنون بالله واليوم الاخر يوادون من حاد الله ورسوله ولو كانوا اباءهم او ابنائهم او عشيرتهم..

அல்லாஹ்வையும், இறுதி நாளையும் உறுதி கொண்டோர் அல்லாஹ்வோடும், இன்னும், அவனுடைய திருத்தூதரோடும் முரண்படுவோரை நேசிப்பதாக நீர் காண மாட்டீர்,அவர்கள் அவர்களின் தந்தையாகவோ, அல்லது, மகனாகவோ, அல்லது, சகோதரன், அல்லது, உறவினர்கள் உள்ளிட்டர்களாகவோ இருப்பினும் சரியே! 58 : 22

மேலும் கூறுகின்றான்.

يا ايها الذين امنوا ان من ازواجكم واولادكم عدو لكم فاحذروهم

ஈமான் கொண்டவர்களே! உங்களுடைய சிலமனைவிமார்களும், இன்னும் பிள்ளைகளும், உங்களின் விரோதிகளாகும், எனவே, அவர்களுடன் நீங்கள் பேணுதலாக இருந்து கொள்ளுங்கள் 64 :14

மேற்கண்ட திருவசனங்கள் யாவும் காபிர்களின் உறவும், காபிர்களின் பிள்ளைகளும் மறுமையில் பிரயோசனப்படமாட்டார்கள் என்பதை தெளிவாக படம் பிடித்து காட்டுகிறன. ஆகவே, குற்றச்சாட்டில் முன்வைக்கப்பட்ட திருவசனத்தில் சொல்லப்பட்ட உறவுகள், காபிர்கள் என்பது திட்ட வட்டமாகிவிட்டது.

தொடரும்...

குற்றச்சாட்டு: 3

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

يوم ينفخ في الصور فلا انساب بينهم يومئذ ولا يتساءلون..

எனவே, ஸூர் ஊதப்பட்டால், அவர்களுக்கிடையில் உறவு இருக்க மாட்டாது, இன்னும், ஒருவர் மற்றவரின் பேச்சை கேட்கவும் மாட்டார்கள். 23: 101

கியாமத்து நாளில் சகல உறவுகளும், குடும்பங்களும் பயனற்றவைகளாகி விடும், ஆகவே, நபியின் குடும்பமாக இருக்கலாம், அல்லது வலியின்

குடும்பமாக இருக்கலாம், கியாமத்தில் எவராலும் பயன் கிடைக்காது, ஆகையால்,ஸெய்யிதுக்கும், ஸெய்யிதல்லாதவருக்குமிடையில் எந்த வேறுபாடுமில்லையென்று இத்திருவசனம் கூறுகின்றது.

பதில்: கியாமத்தின் ஆரம்பத்தில் அல்லாஹுத்த ஆலாவின் நீதி வெளிப்படும், அந்நேரத்தில் மக்கள் அல்லோலப் பட்டிருக்கும் பயங்கரமான வேளையில் தனித்திருக்கும் ஈ நிலையைப் பற்றியே இத்திருவசனம் கூறுகின்றது, அந்த நேரத்தில் மஹப்பத், உறவு மற்றவருக்கு உதவிசெய்வது உள்ளிட்ட யாவும் முற்றுப்பெறும், ஒவ்வொருவரும் நன்னைப்பற்றியே கவனம்செலுத்துவார்கள், எவருக்கும் அடுத்தவர்களைப்பற்றிய சிந்தனையிருக்காது, இதுபற்றிய விளக்கத்தை மற்றுமொரு திருவசனத்தில் றப்புத்த ஆலா கூறுகின்றான்,

يوم يفر المرء من اخيه وامه وابيه وصاحبته وبنيه لكل امرأ منهم يؤمئذ شان يغنيه,

அந்த நாளில் மனிதன் தனது சகோதரன், மற்றும் தாய் , தந்தை ,மனைவி , மக்கள் உள்ளிட்ட அனைவரையும் விட்டும் ஓடுவான், ஒவ்வொரு மனிதனும் தன்னைப்பற்றிய சிந்தனையிலேயே இருப்பான், அடுத்தவர்களைப்பற்றி அறியமாட்டான். 78: 34-37

இத்திருவசனத்தில் எந்த வொரு குடும்பத்தின் மகத்துவத்திற்கான மறுப்பும் கிடையாது, குடும்பத்தின் மகத்துவம் வேறு! மறுமையின் அமளிவேறு! கியாமத்தின் ஆரம்ப கட்டத்தில் நபிமார்களும் அடுத்தவர்களுக்குப் பரிந்துரை செய்வதை நிராகரிப்பார்கள், நமது ரசூலே கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைத் தவிர்த்து வேறு எவருக்கும் அல்லாஹ்வுக்கு முன்னால் உதட்டை அசைக்கும் துணிவு இருக்காது, பயங்கரமான அந்த நேரத்தில் சங்கையான நபிமார்கள் கூட கண்ணியமில்லாதவர்கள் என்பது கடமையாகி விடுமா? நிச்சயமாக இல்லை, கியாமத்தின் பயங்கரமும், தனிமையும் பொதுவாக மனித இனத்திற்கே இருக்கும்,

அல்லாஹ்வுடைய சொந்த நல்லடியார்கள் அந்த அமளியிலிருந்து பாதுகாக்கப்படுவார்கள்.

அல்லாஹுத்தஆலா கூறுகிறான்.

لا يحزنهم الفزع الاكبر وتتلقاهم الملائكة

மிகப்பெரிய திடுக்கம் அவர்களைக் கவலைக்கு ள்ளாக்காது, உங்களிடம் வாக்களிக்கப்பட்ட நாள் இதுதான் என்று மலக்குகள் உங்களிடம் வந்து சோபனம் கூறுவார்கள். 21: 102

மேலும் கூறுகின்றான்.

الا ان اولياء اللّٰه لا خوف عليهم ولا هم يحزنون.

அறிக! நிச்சயமாக அல்லாஹ்வுடைய வலிமார்களுக்கு அந்த நாளில் அவர்களுக்கு அச்சமுமில்லை இன்னும் ,கவலையுமில்லை 10: 62

அல்லாஹ்வின் நேசர்களின் நட்பு அந்த நேரத்திலும் நிலைத்திருக்கும், ஏனையவர்களின் உறவு விரோதத்தினால் மாறுபட்டிருக்கும் என்பது திருக்குர்ஆன் மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளது.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

الاخلاء يوميد بعضهم لبعض عدو الا المتقين

உற்ற நண்பர்களும் அந்த நாளில் ஒருவருக்கொருவர் பகைவர்களாகிவிடுவார்கள் பயபக்தியாளர்களைத் தவிர. 43: 67

இந்த உலகத்தில் சங்கையான நபிமார்களின்குடும்பத்திற்கு மகத்துவமில்லையென்றோ, இன்னும், கியாமத்தில் குடும்பம் பயனளிக்க மாட்டாது என்றோ இத்திருவசனத்தினால் நிரூபணமாகிவிடாது.

குற்றச்சாட்டு: 4

அனைத்து மனிதர்களும் ஆதம் அலைஹிஸ்ஸலாத்து வஸ்ஸலாமவர்களின் மூலமாகவே பிறந்தார்கள், ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிறப்பு மண்ணால் ஆனது என்று தெரிகிறது, எனவே ,சகல மனிதருடைய உறவுகளும் சமத்துவமாகும், எவரும் எவரை விட மகத்துவமானவர்களில்லை என்பது ஹதீதின் மூலம் தெரிய வருகிறது.

பதில்: ஒரு கோத்திரம் மறுகோத்திரத்தை இழிவாகக் கருதக்கூடாது, அனைவருக்குமான அடிப்படை மண் என்பதுதான் இந்த ஹதீஸின் நோக்கமாகும், மண்ணில் பணிவும், தாழ்வும் இருக்கிறது, இவ்வாறான பணிவு, தாழ்வின் காரணத்தினால் தான் மண்ணில் கனிகளும், பூக்களும் தோப்புகளும் பயிர்களும் செழிப்பாக இருக்கின்றன, அக்கினியில் பெருமையும், கர்வமும் இருக்கிறன. ஆகவே, அதில் இவை எவையும் இருப்பதில்லை

எந்த ஒரு குடும்பமும் அடுத்த குடும்பத்தை விட மேலானதில்லை என்பது இங்கு நோக்கமல்ல, சில குடும்பம் சில குடும்பத்தை விட மேலானது என்பது ஹதீதின் பொருளிலிருந்து தெரிகிறது, ஏனெனில், சகல மனிதர்களுக்குமான அடிப்படை மண்! சிலமண் சில மண்ணை விட மேலாக இருக்கிறது, ஏனெனில், புனித மதீனாவின் மண் அடுத்த மண்ணை விட மேலானது, பள்ளிவாசலின் மண், சந்தையிலிருக்கும் மண்ணை விட மேலானது, ஹளறத் ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாமவர்களின் குதிரையின் குரவையில் பட்ட மண் பிர்அஔனின் குதிரையின் குரவையிலுள்ள மண்ணை விட மேலானது, வளமான பூமியின் மண் வளமற்ற உவர்மண்ணை விட மேலானது, உவர்

நிலத்தில் எந்த பயிரும் விளைவதில்லை.
இவ்வாறு நபிமார்களோடு தொடர்புள்ள குடும்பங்களும், அவர்களுடைய மண்ணும் ஏனைய குடும்பங்களின் மண்ணை விட மேலானது.

மேலும், மண்ணில் இரண்டு விதமான சிறப்புப் பண்புகள் இருக்கின்றன.

1. அது மேல்நோக்கிச் சென்றாலும், அடுத்தவரால் வீசப்பட்டாலும், வெளிச்சக்தியால் இயக்கப்பட்டாலும் எப்போதும் கீழ் நோக்கியே விழும்.

2. மண் பூப்பதற்கும், பழமாவதற்கும் எப்போதும்தண்ணீரில் தேவைப்படும், இவ்வாறு ஒவ்வொரு மனிதனும் இயல்பாகவே பின்பக்கமாகவே சாய்ந்து விழுகின்றான்,

நல்லடியார்களின் பார்வையின் பரக்கத்தினால் அவனுக்கு உயர்ச்சியும் கிட்டுகின்றது, அருளும் கிடைக்கிறது, சங்கையான சாதாத்துமார்களுக்கான இந்த மகத்துவம் அவர்களுக்கு அவர்களின்இயல்பான தரப்பிலிருந்து கிடைப்பதில்லை, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களோடு அவர்களுக்கு இருக்கும் உறவால் தான் இந்த உயற்சியை அவர்கள் பெற்றுக்கொள்கின்றார்கள்.

குற்றச்சாட்டு, 5

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

يا فاطمة سليني من مالي ما شئتي لا اغني عنك من الله

பாத்திமாவே! என் பொருளிலிருந்து நீ விரும்பியதைக் கேள்! அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து உம்மை என்னால் தூரமாக்க முடியாது.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களால் தன் குடும்பத்தையோ, தனது சொந்தம் மகளையோ காப்பாற்ற முடியாது, அவர்களுக்கு எந்த பிரயோசனத்தையும் இவர்களுக்குச் செய்ய இயலாது என்று இந்த ஹதீதின் மூலம் தெரிகிறது, ,அப்படியாயின், ஏனைய செய் யிதுகளுக்கு எவ்வாறு பிரயோசனம் செய்ய முடியும்.? ஏனைய குடும்பங்களுக்கு என்ன நிலையோ, அதே நிலை தான் ரசூலுல்லாஹுடைய குடும்பத்துக்குமான நிலையுமா கும்.

பதில்: முதலில் இந்த ஹதீது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஈமானுக்குரிய கட்டளையான எத்திவைத்தலாகும், இதன் நோக்கம் பாத்திமாவே! ஈமான் கொள்ளும்! ஈமான் ஏற்றுக்கொள்ளப்படாவிட்டால், இந்த குடும்பமெல்லாம் பயனற்றதாகிவிடும், ஒரு மனிதன் நபியவர்களின் குடும்பத்திலிருந்து கொண்டு ஈமான் கொள்ளவில்லையென்றால், அவர் சைய்யிதல்ல! காரணம், அவர் முஸ்லிம் அல்ல!

அல்லாஹுத்தஆலா நூஹ் அலைஹிஸ்ஸலாமவர்களிடம் கூறினான்.

انه ليس من اهلك انه عمل غير صالح

நூஹே! இந்த கன்ஆன் உமது குடும்பத்தைச்சேர்ந்தவனல்ல, ஏனெனில் அவன் நடத்தை கெட்டவன். 11: 46

எந்தவொரு மீர்ஸாயி(காதியானி). றாபிழி(ஷீஆ) ஜகடாலவி(அஹ்லுல் குர்ஆன்) வஹாபி, உள்ளிட்டோர் ஸெய்யிதாகமுடியாது. ஏனெனில் , ஸெய்யிதாகுவதற்கு ஈமான் அவசியம், இவர்கள் ஈமானைப்பற்றி அக்கறையில்லாதவர்கள், குப்றின் காரணமாக அனைத்து குடும்ப உறவுகளும் துண்டிக்கப்பட்டு விட்டது, ஆகவேதான், ஒரு காபீர் ஒரு முஃமினை திருமணம் செய்ய முடியாது, மூஃமினுடைய சொத்துக்களுக்கு அனந்தரம் கொள்ள முடியாது, முஃமின்களின் கப்ரிஸ்தானங்களில் அடக்கம் செய்ய முடியாது, காபிரான பிள்ளைகளுக்கு முஃமினான தந்தையின் சொத்தில் வாரிசு கிடைக்காது, அப்படியிருக்க காபிருக்கு குடும்பத்தின் சிறப்பும், கண்ணியமும் எப்படிக் கிடைக்கும்?

அபூலஹப் பனு ஹாஷிம் குலத்தைச் சேர்ந்தவன் தான், ஆயினும், அவனுக்குக் கண்ணியமில்லை, ஆகவே, முஃமினான சங்கையான சாதாத்துமார்கள் மட்டும் தான் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடைய கண்ணியமான குடும்பத்திலிருந்து நிச்சயம் பிரயோசனம் பெறுவார்கள், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் தொடர்பால் அனைத்து முஸ்லிம்களும் பயனடைவார்கள், ஒரு நரகவாதி சொர்க்கம் செல்வான், பாவியும் மன்னிப்பை பெறுவான், உறவு பயனளிக்கிற பொழுது குடும்பம் ஏன் பயனளிக்க மாட்டாது?,

அல்லாஹுத்தஆலா கூறுகிறான்.

ولو انهم اذ ظلموا انفسهم جاءوك فاستغفروا الله واستغفر لهم الرسول لوجدوا الله توابا رحيما.

இன்னும், அவர்கள் தங்களுடைய ஆத்மாக்களுக்கு அநியாயம் செய்து கொண்டு அன்பரே! உங்களின் திருச்சமூகம் வந்தபின், அல்லாஹ்விடம் மன்னிப்பு கேட்டு, ரசூலும் அவர்களுக்காக பரிந்துரை செய்து கொண்டால், கண்டிப்பாக அல்லாஹ்வை அதிகமாக தௌபாவை ஒப்பு கொண்டவனாகவும், இரக்கம் உள்ளனாகவும் கண்டு கொள்வார்கள். 4 : 64

மேலும் கூறுகின்றான்.

وما كان الله ليعذبهم وانت فيهم

நேசரே! நீர் அவர்களிடம் இருக்கையில் அவர்களை தண்டிப்பது அல்லாஹ்வின்

வேலை இல்லை, இன்னும், அவர்கள் மன்னிப்புத் தேடிக் கொண்டிருக்கும் வரையில் அல்லாஹ் அவர்களை தண்டிப்பவனாகவுமில்லை. 8: 33 .

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்

شفاعتي لاهل الكبائر من امتي

எனது ஷபாஅத் எனது உம்மத்தில் பெரும் பாவிகளுக்குரியதாகும்.

மேலும் கூறினார்கள்.

يخرج قوم من النار بشفاعة محمد ( صلى الله عليه وسلم) يسمون الجهنميين

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஷபாஅத்தினால் நரகவாதிகள் என்று பெயர் பெற்ற பெரும் தொகையினர் நரகத்திலிருந்து வெளியேறுவார்கள்.

ஷபாஅத் பற்றிய திருவசனங்களும், இன்னும், ஹதீதுகளும் ஏராளமாக உள்ளன, இதிலிருந்து எவருடைய முடிவு ஈமானில் உள்ளதோ அவருக்கு ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஷபாஅத்தின் பாக்கியம் கிடைக்கும் என்பது தெரிய வருகிறது, ஆகவே, நிச்சயமாக ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடைய குடும்பம் பிள்ளைகள் அன்னாருடைய ஷபாத்திலிருந்து பிரயோஜனம் பெறுவார்கள்.

தொடரும்...

பரிசுத்த அஹ்லுல் பைத்துக்களின் சிறப்பம்சங்கள்n ( 6 )

# முடிவுரையும், முக்கிய வழிகாட்டல்களும்

சங்கையான ஸாதாத்மார்கள் தொடர்பாக முக்கியவிடயங்கள் , மற்றும் விஷேட வழிகாட்டல்களைக் கவனத்தில் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

வழிகாட்டல். : 1

அல்லாஹ்வின் சிங்கமாகிய ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும், சொர்க்கத்தின் பெண்கள் தலைவி ஹளறத் பாத்திமத்துஸ்ஸஹறா றழியல்லாஹு அன்ஹா அவர்களுக்கும் பிறந்த பிள்ளைகளையே "ஸெய்யித் " என்று கூறப்படுகின்றது, இன்னும், ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு அவர்களின் ஏனைய மனைவிமார்கள் மூலம்

பிறந்தவர்களை "அலவி" என்று கூறப்படும், ஸெய்யித் எனக்கூறப்படமாட்டாது, உ+மாக முஹம்மத் இப்னு ஹனபிய்யா உள்ளிட்டவர்கள்.

ஸெய்யிதுகளுக்குரிய அனைத்து சிறப்புக்களும் ஹளறத் பாத்திமத்துஸ்ஸஹறா றழியல்லாஹு அன்ஹா அவர்களின் மணிவயிற்றில் பிறந்தவர்களுக்கே சாரும், ஏனெனில், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்பம் இவர்களில்தான் உள்ளவாங்கப்படுவார்கள்.

## வழிகாட்டல்: 2

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிள்ளைகளுக்கு ஸைய்யித் என்பது இரண்டு காரணங்களினால் கூறப்படுகின்றன.

1-ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தங்களின் இரண்டு பிள்ளைகளான ஹளரத் ஹஸன், ஹளறத் ஹுஸைன் ரலியல்லாஹு தஆலா அன்ஹுமா தொடர்பாக கூறினார்கள்.

الحسن والحسين سيدا شباب اهل الجنة

என்னுடைய ஹஸனும், ஹுஸைனும் சொர்க்கத்தின் இளவல்களின் தலைவர்களாகும்.

அதாவது, இளம்பிராயத்தில் மரணிக்கின்றவர்களுக்கு அவர்கள் தலைவர்களாகும். மேலும், இமாம் ஹஸன் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களுடையவிடயத்தில் கூறினார்கள்.

ابني هذا سيد لعل الله يصلح به بين فئتين من المسلمين

எனது இந்த மகன் செய்யிதுஆவார்,அதாவது, தலைவர் ஆவார், இவர் மூலமாக முஸ்லிம்களின் இரண்டு கூட்டங்களில் அல்லாஹுத்தஆலா சமாதானத்தை ஏற்படுத்தி வைப்பான்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இந்த இரண்டு பிள்ளைகளையும் ஸெய்யது என்று கூறிய காரணத்தினால் ,அவர்களின் பிள்ளைகளையும் ஸெய்யித் என்று கூறப்படுகிறது.

2- ஸெய்யித் என்றால், தலைவர் என்று பொருள், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு செய்யுதுல் முர்ஸலீன் ரசூல்மார்களின் தலைவர் என்று ஒரு புனைப்பெயர் இருக்கிறது, இவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிள்ளைகள், ரசூல்மார்களின் தலைவரின் பிள்ளைகளும் முஸ்லிம்களின் தலைவர்களாக கூறப்படுகின்றார்கள்.

சுப்ஹானல்லாஹ்! ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நபிமார்களின் தலைவர் அல்லாஹ்வின் சிங்கமாகிய ஹஸ்ரத் அலி ரலியல்லாஹு தஆலா அன்ஹு வலிமார்களின் தலைவர், ஹளரத் ஃபாத்திமா முஸ்லிம் பெண்களின் தலைவர், ஹளரத் ஹுஸைன் ரலியல்லாஹு தஆலா அன்ஹு ஷஹீதுகளின் தலைவர், தலைமைத்துவம் அவர்களைக் காதலிக்கிறது.

ஹளறத் யஹ்யா அலைஹிஸ்ஸலாமவர்கள் தொடர்பாக அல்லாஹுத்தஆலா கூறினான்.

سيدا وحصورا ونبيا من الصلحين

இன்னும், நாயகமானவராகவும், எப்போதும் பெண்களிலிருந்து தன்னைப் பாதுகாத்தவராகவும், எமக்குச் சொந்தமானவர்களில் நின்றுமான நபியாகவும் இருப்பார். 3: 39

ஆக, அல்லாஹ்வின் நேசர்களுக்கு றப்புத்த ஆலாவும் , இன்னும்,ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமும் ஸெய்யித் என்று கூறியிருக்கிறார்கள்.

வழிகாட்டல் : 3

தந்தை ஸெய்யிதாக இருந்தால் தான் பிள்ளையும் ஸெய்யிதாகும், தாய் ஸெய்யிதாவாக இருந்து, தந்தை ஸெய்யிதில்லாதி ருந்தால், பிள்ளைகள் ஸெய்யிதாக மாட்டார்கள், இவர்கள்மீது செய்துக்குக் கூறிய சட்டங்கள் நடைமுறையில் இருக்காது இவர்கள் ஜகாத் பொருளை உண்பது ஆகுமானது, ஏனெனில், பரம்பரை என்பது, தந்தை வழியே தவிர, தாய் வழியில் அல்ல, தந்தை சையதாக இருந்து, தாய் செய்தாஅல்லாமல் இருந்தாலும் பிள்ளைகள் செய்துதான்.

ஹளறத் கௌதுத் தகலைன் முஹ்யத்தீன் அப்துல் காதிர் ஜீலானி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் தந்தை ஹஸனி வழி ஸெய்யித், தாய் ஹுஸைன் றழியல்லாஹு வழி ஸெய்யிதா ஆகும் , ஹளறத் இமாம் மஹ்தி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களும் ஹுஸைனி வழி ஸெய்யிதாகும், அவர்களின் காலத்தில் ஹஸன் வழி ஸெய்யித் மிக குறைவாகவும் ஹுஸைனி

வழி செய்யித் அதிகமாக இருப்பார்கள் ஆயினும், இரு வழியில் வந்த செய்யிதுகளையும் கண்ணியப்படுத்துவது வாஜிபாகும்.

### வழிகாட்டல் :4

சங்கையான செய்யிது களின் சிறப்புக்களைப் பற்றி கூறியதனால் அவர்கள் நற்காரியங்கள் செய்யத் தேவையில்லை, தொழத் தேவையில்லை, குடும்பத்தின் சிறப்பினால் மட்டுமே அவர்கள் அமல்களிலிருந்து தனிமையாகிவிட்டார்கள் என்பது பொருளல்ல, இந்த சிந்தனை சுத்தத் தவறும், அபத்தமானது மாகும்,

சங்கையான சாதாத்துமார்கள் அடுத்தவர்களைவிட அதிகமாக நன்மைகள் செய்ய வேண்டும், அவர்கள் மற்றவர்களுக்கு முன்மாதிரியாக இருக்க வேண்டும், முதலாம் வகுப்பில் பிரயாணம் செய்பவர் இரண்டாம் வகுப்புப் பெட்டியில் பிரயாணம் செய்பவரை விட, அதிகமாக செலவு செய்ய வேண்டும், அவர்கள் தங்களுடைய முன்னோர்களுக்கு மேலும் முன்னுதாரணமாக இருக்க வேண்டியது அவர்களுக்குக் கடமையாகும், இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு வாள் வீச்சுக்கு மத்தியிலும் தொழுது கொண்டிருந்தார்கள், ஆனால், அவர்களின் பிள்ளைகளோ காரணமில்லாமல் தொழுகையை விடுகிறார்கள், இது மிகவும் கவலைக்குரியதும், வேதனைக்குமுரிய விடயமாகும்.

### வழிகாட்டல் :5

சங்கையான சாதாத்துகளைப் பற்றிக்கூறப்பட்ட சிறப்புக்கள் யாவும் சரியான வழியில் செய்யிதாக வந்த குடும்பத்திற்கு மாத்திரமே பொருந்தும், ஹளறத் பாத்திமத்துஸ் ஸஹாரா ரலியல்லாஹு தஆலா அன்ஹா விலிருந்து குறித்த நபர் வரையிலான பரம்பரையில் செய்தல்லாத எவரும் இடையில் நுழையாமலிருத்தல் வேண்டும், ஆனால் ,தற்காலத்தில் போலி செய்யிதுகள் மலிந்து விட்டனர், செய்யிதல்லாத ஒருவரை செய்யித் என்று சொல்வது கடுமையான ஹராமும், கொடுமையான குற்றமுமாகும்,

தனக்குச் சொந்தமில்லாத எஜமானின் பக்கம் அவரின் அடிமை என்று தன்னைக் கூறுகின்றவர் மீது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் சாபமிட்டிருக்கிறார்கள், மேலும், அடுத்தவர் குடும்பத்தோடு தன்னைச் சேர்த்துக் கூறுவோர் மீதும் லஃனத் செய்துள்ளார்கள், ஆகவே சையதில்லாத ஒருவர் தன்னை செய்யிது என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களோடு சேர்த்துக் கூறுபவர் அன்னாரின் சாபத்திற்கும் தகுதியானவராகவே கருதப்படுவார்.

ஹளறத் செய்து பின் ஹாரித் ரலியல்லாஹு தஆலா அன்ஹு ஹரிதாவின் மகனாவார் ,அவரை ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வாயால் தனது மகன் என்று கூறி மகன் போன்று வளர்த்தார்கள், இதன்

காரணமாக மக்களும் ரசூலுல்லாவின் மகன் என்று கூறினார்கள், அதை திருக்குர்ஆன் கடுமையாக கண்டிக்கிறது.

وما جعل الله ادعياءكم ابنائكم ذلكم قولكم باقواهكم.

இன்னும், நீங்கள் தத்தெடுத்த புத்திரர்களை உங்களின் மக்களாகவும் ஆக்கவில்லை ,இது உங்களின் வாய்ப் பேச்சாகும். 33: 4

பின்னர், அவ்வாறு கூறுவதை தடை செய்கிறான்.

ادعوهم لابائهم هو اقسط عند الله فان لم تعلموا اباءهم فاخوانكم في الدين.

அவர்களை அவர்களின் தந்தையோடு சேர்த்துக் கூறியே கூப்பிடுங்கள், இதுதான் அல்லாஹ்விடத்தில் மிக சரியானதாகும், அவர்களின் தந்தையை நீங்கள் அறியாவிட்டால், அப்போது மார்க்கத்தில் உங்களின் சகோதரனாகும். 33: 5

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஸைத் அவர்களை வளர்த்து, அவருக்கு எஜமானனாகவும் இருந்தும் அவரை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களோடு சேர்த்துக்கூறுவது ஹறாமாகும், எவராவது, தான் ஸெய்யிதில்லாமல் தன்னை செய்யிது என்று கூறிக்கொண்டு ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடைய பிள்ளையென்று கூறுவது இந்த திருவசனத்தின் வெளிச்சத்தில் எவ்வளவு பெரிய குற்றம் என்பதை கவனித்து பாருங்கள்!

மேலும், கோபத்தில் தனது மனைவியை தாய் என்று கூறுவதை திருக்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது.

وما جعل ازواجكم الئي تظاهرون منهن امهاتكم.

உங்கள் தாய்க்கு சமப்படுத்திய உங்கள் மனைவிமார்களை உங்களின் தாயாகவும் ஆக்கவில்லை. 33: 4

மற்றுமோரிடத்தில் தனது மனைவி மார்களை தன் தாய்க்கு ஒப்பிட்டு கூறுவது பற்றி திருக்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது.

الذين يظهرون منكم من نسائهم ما هن امهاتهم ان امهاتهم الا الئي ولدنهم وانهم ليقولون منكرا من القول والزورا

உங்களில் எவர் தங்களுடைய மனைவிமார்களை தன்னுடைய தாயின் இடத்தில் வைத்துக் கூறுகின்றார்களோ, அவர்கள் அவர்களின் அன்னையர்கள் கிடையாது, அவர்களின் அன்னையர்கள் என்பது அவர்களைப் ஈன்றவர்கள் தான், இன்னும், அவர்கள் சந்தேகமில்லாமல் அவர்கள் புத்திக்கு புலப்படாததையும் சுத்த பொய்யையும் கூறுகின்றனர். 58: 2 .

தனது மனைவியை தாய்க்கு ஒப்பிட்டு கூறுவதை எவ்வாறு திருக்குர்ஆன் கெட்ட விடயம் என்றும் ,பொய்யென்றும் , அவர்களுக்கு கடுமையான தண்டனை உண்டு என்றும் உறுதிப்படுத்தியதோ, அவ்வாறே தன்னுடைய தந்தையல்லாத ஒருவரை தந்தை என்று கூறுவது குர்ஆனின் இந்தத்தீர்ப்பின்படி, பெரும் பொய்யும், தண்டனைக்குத் தகுதியானதுமாகும்.

முஸ்லிம் ஷரீபில் ஈமானுடைய அத்தியாயத்தில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

من ادعي الى غير ابيه وهو يعلم انه غير ابيه فالجنة عليه حرام.

எவராவது ஒருவர் தன்னை தந்தை அல்லாதவரை தனது தந்தையில்லையென்று தெரிந்து கொண்டே சேர்த்துக் கூறினால் , சொர்க்கம் அவர் மீது ஹராமாகிவிடும்.

இரண்டாவது அறிவிப்பில்,

من رغب عن ابيه فهو كفر

எவர் தனது தந்தையை நிராகரிக்கின்றாரோ அவர் குப்று செய்து விட்டார்.

மூன்றாவது அறிவிப்பில்,

من ادعي ابا في الاسلام غير ابيه يعلم انه غير ابيه فالجنة عليه حرام.

எவராவது ஒருவர் தெரிந்து கொண்டே தன் தந்தையல்லாத ஒருவரை தந்தையென்று தொடர்பு படுத்துவாராயின், சொர்க்கம் அவர் மீது ஹராமாகிவிடும்,அவர் நன்றி மறந்தவராகி விடுவார்.

வழிகாட்டல் : 6

ஸெய்யிதுகளின் சமுகத்திலுள்ள ஒருவர் இஸ்லாத்திலிருந்து வெளியேறி ஹிந்து சீக்கு, காதியானி, றாபிழி இன்னும் இவர்களல்லாதவர்களாக மாறினால், அவர் செய்துமல்ல மேற்கூறப்பட்ட சிறப்புக்களும் அவருக்குக் கிடையாது, ஏனெனில், குப்றின் காரணமாக அவர்களின் வம்சசத்தொடர் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடமிருந்து துண்டிக்கப்பட்டு விட்டது, அவர் ஷரீஅத்தில் தனது தந்தையின் குடும்பத்தில் இல்லாதவராகிவிட்டார்.

திருக்குர்ஆன் நூஹ் அலைஹிஸ்ஸலாத்துவஸ் ஸலாமவர்களின் மகன்விடயத்தில் இவ்வாறு கூறுகிறது .

انه ليس من اهلك انه عمل غير صالح

நூஹே! கன் ஆன் உமது குடும்பத்தைச் சேர்ந்தவனல்ல, அவனுடைய செயல் பாழானது..

ஹளறத் நூஹ் அலைஹிஸ்ஸலாமவர்களுடைய சொந்த மகன் கன் ஆன் குஃப்ரின் காரணமாக அவருடைய பிள்ளை யில்லாமலாகிவிட்டான், இந்த வகையில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடைய மார்க்கமில்லாத பிள்ளைகள் எவ்வாறு அவர்களின் பிள்ளைகளாக ஆகுவார்கள்.?

மேலும் ஆசிப்இப்னு வாயில் விடயத்தில் திருக்குர்ஆன் கூறுகிறது.

ان شانئك هو الابتر

நேசரே! நிச்சயமாக உமது விரோதி சந்ததியை விட்டும் தடுக்கப்பட்டவன்.108: 3

பாருங்கள்! ஆசிப் இபுனு வாயில் பிள்ளை குட்டி உள்ளவர், ஆனாலும், அவர் சந்ததியற்றவர் என்று திருக்குர்ஆன் கூறுகிறது, ஏனெனில், அவருடைய அனைத்து பிள்ளைகளும் முஸ்லிம்களாகி விட்டனர், அவர் காபிராகவே இருந்து விட்டார், ஆகவே, அவருடைய பிள்ளைகளுக்கு அவர் தந்தையாகக் கருதப்படவில்லை, இன்னும், இவர்களும் அவரின் பிள்ளைகள ல்ல, எனவே, மார்க்கத்தின் மாற்றத்தால் சந்ததி முற்றுப்பெறுகிறது, சந்ததிக்கு மார்க்கத்தில் ஒற்றுமையாக இருப்பது நிபந்தனையாகும்.

எனினும் ,அவர்களில் ஷரீஅத்தின் சட்டமும் நடைமுறைக்கு வராது, ஒரு முஸ்லிமான தந்தையின் காபிரான பிள்ளை தந்தையிடமிருந்து சொத்துக்களை அனந்தரம் கொள்ள முடியாது, காபிரான மகன் மற்றும் வாரிசுகளுக்கு தடையாக அமைய மாட்டார், தந்தையோடு சேர்த்து மையவாடியில் அடக்கம் செய்யப்பட

மாட்டார், தந்தை காபிரான பிள்ளையினுடைய மார்க்க ரீதியான அடக்க விடயங்களை செய்ய முடியாது, முஃமினான சில தாய்கள் காபிரான தனது பிள்ளையிலிருந்து பர்தாவை போட்டுக் கொள்கின்றனர், ஒரு காபிரானவரை ஒரு முஃமினான பெண்ணுக்கு நிக்காஹ் செய்ய முடியாது, ஆக, ஜனாஸா, வாரிசுரிமை ,திருமணம், நல்லடக்கம், கபன் உள்ளிட்ட எந்த சட்டங்களும் அந்த காபிருக்கு முஃமினான தந்தையோ, பிள்ளைகளோ செய்ய முடியாது.

இவ்வாறு, தன்னை செய்யிது என்று கூறிக்கொண்டு முர்தத்தானவர் முஸ்லிமேயில்லாதிருக்கும்போது ஸொய்யிதாக இருப்பது பற்றிய பேச்சுக்கே இடமில்லை.

குறிப்பு: மேற்கண்ட விளக்கத்தின் படி, பாத்திமாத் துஸ்ஸஹறா ரலியல்லாஹு தஆலா அன்ஹாவிலிருந்து குறித்த நபர் வரையிலுமானவர்களுடைய தந்தை வழி தொடர்ச்சியாக செய்தாயிருந்தால் பிள்ளைகளும் செய்தாகுவார்கள், தொடர்ச்சியாக விடுபடாமல் தாயும் தந்தையும் ஹஸன் ஹுஸைன் ரலியல்லாஹு தஆலா அன்ஹுமா வழியில் வருவார்களாயின், பிள்ளைகளும் ஹஸனி , ஹுஸைனியாகுவார்கள், இருவரில் ஒருவர் செய்தல்லாமல் அல்லது தாயும் , தந்தையும் ஹஸனி ஹுஸைனி இரண்டும் அல்லாமல் ஏதாவது ஒன்றில் இருந்தால், ஒன்றில் அவர் ஹஸனியாக இருப்பார், அல்லது ஹுஸைனியா இருப்பார், இவ்வாறு தாய்வழி, தந்தை விழி இரண்டும் தொடர்ச்சியாக இருப்பது இக்காலத்தில் குதிரை கொம்பாகும், ஆகவே தான் ஹளறத் மஹதி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஹுசைனியாக மாத்திரமே இருப்பார்கள்.

தற்காலத்தில் கேரளாவிலிருந்து இலங்கை வரும் சில தங்கள் மார்கள் தங்களை ஹஸனி,ஹுஸைனி என்று துணிச்சலாகப் போடுவது ஆச்சரியமாக உள்ளது, இது பற்றி அப்பகுதியிலிருந்து வரும் வேறு சில தங்கள்மார்களிடம் நாம் வினவிய போது, தடுமாற்றமான பதிலையே கூறுகின்றனர், மேலும் இங்கு வருகின்றவர்களில் பலர் செய்யிதுகளல்ல என்றும் உண்மையை உடைத்து வெளிப்படையாகவும் சொல்லுகின்றனர். அவ்வாறு உண்மையை உடைத்துக்கூறியவர்களில் அந்தரோத் தீவைச்சேர்ந்தவரும், மர்கஸ் தகாபத்துஸ் ஸுன்னியாவில் உஸ்தாதாகவுமிருந்த மிகச்சிறந்த அறிஞர் புர்ஹானுத்தீன் முஸலியார் முக்கியமானவர்,

கேரளாவிலிருந்து வரும் தங்கள்மார்களின் தாய்வழி பாத்திமா நாயகி வரை ஒருபோதும் தொடரவில்லை, இவர்களின் தாய்வழி ஆரம்பத்தில் இஸ்லாத்தைத்தழுவியவர்கள் என்பதுதான் வரலாறு , தாய் வழியிலும், தந்தை வழியிலும் தொடராக ஹஸனி, ஹுஸைனி தொடராத காரணத்தால்தான் ஹளறத் மஹ்தி அலைஹிஸ்ஸலாம் ஹுஸைனி வழியில் மட்டுமே தந்தை வழியிலிருப்பார்கள், அரபு நாட்டிலே தநந்தை வழியும், தாய்வழியும் ஹஸனி ஹுஸைனி அரிதாக இருக்கையில் புதிதாக இஸ்லாத்தைத்தழுவிய கேரளாவில் இரு வழிப்புனிதம் தொடர்வது ஆச்சரியமில்லையா? வெளுத்ததை யெல்லாம்

பாலாகக் கருதும் அப்பாவி மக்கள் இவர்கள் விடயத்திலும் கவனமாய் இருப்பது நல்லது)

அல்ஹம்துலில்லாஹ்! இந்த ஃபத்வாவை வேலைப்பளுவுக்கு மத்தியிலும் முக்கியமான விடயங்களோடு முற்றுப்பெற்று விட்டது,இதற்கு

المقبول في طها ة نسب الرسول

என்று நாமம் சூட்டியுள்ளேன், றப்புத்த ஆலா இதைக்கபூல் செய்வானாக! ஆமீன்.

وصلى الله تعالى على خير خلقه سيدنا محمد واله وصحبه وسلم

முப்தி

அஹ்மத் யார்கான்.

தமிழ் மொழிபெயர்ப்பு நிறைவு

1- 1 - 2025.